# விலங்குக் கதைகள்

புலவர் த.கோவேந்தன் டி.,லிட்.,

சித்ராலயா பதிப்பகம்
3, பீச்ஹோம் அவென்யூ,
பெசன்ட் நகர், சென்னை - 600 090.

# பதிப்புரை

சிறுவர் முதல் முதியோர்வரை யாவரும் விரும்பிப் படிப்பது கதை நூல்கள்தான். சின்னஞ்சிறு சிங்காரச் சிறுவர்கள் விரும்புகின்ற முறையில் கதை சொல்வதும் எழுதுவதும் தனிக் கலை ஆகும்.

புகழ் பெற்ற பஞ்ச தந்திரக் கதைகளைப் போல் புலவர் கோவேந்தன் எழுதிய இந்தக் கதைப் புத்தகம் விலங்குகளைப் பேச வைத்துச் சிறுவர்களுக்குச் சிறந்த நீதிகளை எடுத்துச் சொல்கிறது.

இந்தக் கதைகளில் கொக்கு, நரி நாரை' சேவல், பூனை முதலிய விலங்குகள் பேசுகின்றன.

இந்தக் கதை நூலைத் தமிழகத்தில் உள்ள அனைத்துப் பள்ளிகளும் வாங்கி ஆதரிக்க வேண்டுகிறோம்.

பதிப்பகத்தார்

## உள்ளே . . .

# காலொடிந்த கொக்கு



முன்னொரு காலத்தில் ஏழை ஒருவனிருந்தான். அவனுக்குக் கொஞ்சம் நிலமிருந்தது. அதைத் தன் ஜீவனோபாயமாகக் கொண்ட அவன் இரவு பகலாக அதில் பாடுபட்டு வந்தான்.

வசந்த பருவம் வந்தது. வழக்கம்போல நிலத்தை உழத் தொடங்கினான் அந்த ஏழை. அப்போது தற்செயலாக ஆகாயத்தை நோக்கினான் அவன். ஒரு கொக்கு பறந்து கொண்டிருப்பதைக் கண்டான் அந்தக் கொக்கு உழவோட்டப் பட்டிருந்த

கழனியை நோக்கி வந்தது. ஆனால் அது உடனே பூமியில் தொப்பென்று விழுந்து



விட்டது. அதைப் பார்த்து ஏழை அங்கு விரைந்து ஓடினான். அதன் பிறகு ஓடிக்

திருந்ததைக் கண்டு தன் வீட்டுக்கே அதை எடுத்துச் சென்றான்.

சிறகு ஒடிந்த அந்தக் கொக்குக்குத் தன் வீட்டில்சிகிச்சை அளிக்கத் தொடங்கினான் ஏழை. அது தனது இறகுகளை நன்றாகப் பயன் படுததத் தெம்பு ஏற்படும் வரை பேணிப் பராமரித்து வந்தான். பிறகு ஒரு நாள் அந்தப் பறவை பறந்து போய் விட்டது.

அந்த ஏழைக் குடியானவன் உழவு வேலையை முடித்து, விதைப்பு ஆரம்பித்த போது, அந்தக் கொக்கு மறுபடி அவனது கழனி மீது பறந்து வந்தது. மூன்று முலாம்பழ விதைகளைக் கீழே போட்டது. அவன் அந்த விதைகளைப் பொறுக்கித் தனது நிலத்தின் ஒரு கோடியில் விதைத் தான். சில நாள்களிலேயே அவை முளை விட ஆரம்பித்தன. அந்த ஏழைக் குடியான வன் அயர்வின்றிக் களையெடுத்தான். செடி களுக்கு நீர் பாய்ச்சினான். சீக்கிரம் முலாம் பழங்கள் கனிந்து கிடந்தன.

அவற்றில் மிகப் பெரிய மூன்று பழங்களைப் பறித்து மிகவும் சிரமப்பட்டு வீட்டுக்குக் கொண்டு போனான். அவை அவ்வளவு கனமாக இருந்தன.

வீட்டில் விருந்துக்கு ஏற்பாடு செய்து நண்பர்களையும் உறவினர்களையும் அழைத்தான் அந்தக் குடியானவன். மூலாம் பழங்களில் ஒன்றை எடுத்து, அதை நறுக்கி விருந்து படைக்க நினைத்தான். ஆனால் கத்தியினால் மூலாம் பழத்தின் மேல் தோலைக் கூட அவனால் கிழிக்க முடியவில்லை. அவ்வளவு கெட்டியாக அருந்தது. மற்ற பழங்களை எடுத்து நறுக்க முயன்றான்; அவற்றையும் நறுக்க முடிய வில்லை.

எனவே ஒரு பெரிய கத்தியை எடுத்துத் தன் பலத்தையெல்லாம் சேர்த்து ஓங்கி ஒரு போடு போட்டான். மூலாம் பழம் விரிசல் கண்டது. அதன் உள்ளே சாறு இருப்பதற்குப் பதிலாக, தங்க நாணயங்கள் இருந்தன. மற்ற இரண்டு மூலாம்

பழங்களிலும் கூட தங்க நாணயங்கள் இருந்தன.

ஏழைக்கு அளவில்லாத மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்தத் தங்க நாணயங்களை



எல்லாம் எடுத்துத் தன் விருந்தாளிகளுக்கு பங்கிட்டுக் கொடுத்தான். அவர்கள்

அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் வீடு சென்றனர் மூன்று முலாம் பழக் கொடிகள் ஒவ்வொன்றிலும் பத்துப் பத்து முலாம் பழங்கள கனிந்தன. அவை அனைத்திலுமிருந்தும் தங்க நாணயங்கள் கிடைத்தன. ஏழை பெரிய பணக்காரனாகி விட்டான்.

பக்கத்தில் ஒரு செல்வந்தன் வசித்து வந்தான். அவன் இந்தக் குடியானவனிடம் வந்து, "நீ எப்படி இவ்வளவு பெரிய பணக்காரனாக ஆனாய்?" என்று கேட்டான்.

முன்பு மிக ஏழையாக இருந்த அந்த நல்ல மனிதன் நடந்த விவரம் முழுவதையும் பணக்காரனிடம் கூறினான்.

"சரி, நமக்கும் கிடைக்குமா பார்க்கலாம்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டு அந்தப் பேராசைக்காரன் தனது கழனியை நோக்கிப் போனான். அந்தக் கொக்கு அவன் பார்வையில் பட்டது, அதற்குத் தெரியாமல் வஞ்சகத் தனமாக

ஒரு கம்பை எடுத்து அதன் காலை ஒடித்து விட்டான். பிறகு அந்தக் கொக்குக்குச் சிகிச்சை செய்ய அதைத் தன் வீட்டுக்குக் கொண்டு போனான்.

சில நாட்களில் கொக்கு குணமடைந்து பறந்து போய் விட்டது. அந்தப் பணக்காரன் தன் கழனிக்குப் போய் அந்தக் கொக்கை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான். ஒரு நாள், அந்தக் கொக்கு பறந்து வந்து இரண்டு விதைகளைப் போட்டது, அந்த விதைகள் முளைத்து விட்டன. கொடி படர்ந்து, பூவெடுத்து, மூலாம் பழங்கள் பழுத்தன.



அது கண்ட அந்தப் பணக்காரன் தன் நண்பர்களையும் உறவினர்களையும் தன்

வீட்டுக்கு அழைத்தான். ஆனால் அவன் அந்த முலாம் பழங்களை நறுக்கிய போது, அதிலிருந்து கூட்டம் கூட்டமாகத் தேனீக்கள் கிளம்பின.

ஒவ்வொன்றும் ஒரு கொட்டைப் பாக்கு அளவு பெரியதாக இருந்தது. அவை அந்தப் பணக்காரனையும் அவனது உறவினர்களையும் கன்னம், உதடு, கண்ணிமை எல்லாம் வீங்கிப் போகும் வரை கொட்டி விட்டன.

ஆனால் இந்த இரக்கமுள்ள நல்ல மனிதன் மகிழ்ச்சியோடு வாழ்ந்து வந்தான். பேராசை பிடித்த தன் அண்டை வீட்டுக்காரனை எண்ணி அவன் நகைத்தான்.



# பூனைக் குட்டிகள்



சிறுவர்கள் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு பூனைக் குட்டி அங்கு வந்தது. அது பசியி னால் கத்திக் கொண்டிருந்தது. பல நாள் கள் சாப்பிடாமல் அதன் உடல் மெலிந்து காணப்படடது.

அல்யான் என்ற சிறுவன் பூனைக் குட்டியை கையில் எடுத்தான்; "நான் என் வீட்டுக்குக் கொண்டு செல்வேன். ஆனால்

என் அம்மா அனுமதிக்க மாட்டாள்" என்றான்.



எனக்கும் பூனைக் குட்டியை எடுத்துச் செல்ல ஆசை தான். ஆனால், எங்கள் வீட்டில் ஒரு நாய் இருக்கிறது என்றான் அல்யானின் நண்பன் சலாஸ்கின்.

நானாவது எடுத்துச் சென்றிருப்பேன். ஆனால் எனக்கு ஒரு சின்னத் தம்பி இருக்கிறான் என்றான் வலேரிகா.



தம்பிப் பாப்பா இருந்தால் என்ன !

என் தம்பி சிறு குழந்தை. அவன் பூனைக் குட்டியின் வாலைப் பிடித்து இழுத்து விடுவான் என்று விளக்கினான் வலேரிகா.

அப்படியானால் நானே எடுத்துச் செல்கிறேன் இங்கே பாருங்கள் இந்த பூனையோ நடுங்கிக் கொண்டு இருக்கிறது. இதனை இங்கு விட்டு விட்டுச் செல்லமுடியாது. என் அம்மா அனுமதிக்கா விட்டாலும் கூட பரவாயில்லை. இதனை என் அறையில் மறைத்து வைத்திருப்பேன். எங்காவது போனால் என்னோடு எடுத்துச் செல்வேன் என்றான் அல்யான்.

அல்யான் பூனைக் குட்டியை வீட்டிற்கு எடுத்துச் சென்றான்.

"அருமையான பூனைக் குட்டி" என்றார் தந்தை.

"நமக்குப் பூனைக் குட்டி தேவையில்லை" என்றாள் அம்மா.

"ஆனால் பூனைக் குட்டிக்கு நாம் தேவை" என்றான் அல்யான்.

"பாவம், போனால் போகட்டும். தாய்ப் பூனை இல்லாத குட்டியை காப்பாற்

றத்தானே வேண்டும்'' என்று எண்ணிய அம்மா 'சரி' என்று ஒத்துக் கொண்டாள்.



அடுத்த நாள் அல்யான் வேறு நிற முள்ள மற்றொரு பூனைக் குட்டியைக் கொண்டு வந்தான். அம்மா திட்டுவாள் என்று பயந்த அல்யான், பெற்றோரிடம் கூறாமல் தன் அறையிலேயே அதனை ஒளித்து வைத்துக் கொண்டான். அவற் றிற்கு உணவு, பால் அனைத்தையும் அல்யான் கொடுத்து வந்தான். அல்யான்

மூன்றாவது பூனைக் குட்டியைக் கொண்டு வரும் வரை வீட்டில் யாருக்கும் இரண்டாவது குட்டி இருப்பது தெரியாது.

ஒரு சமயம் தந்தை, அம்மா, அல்யான் மூவரும் தேநீர் அருந்திக் கொண்டனர்.

ஒரு பூனைக் குட்டி மெல்ல அந்த அறைக்குள் நுழைந்தன.

"இங்கே பார்; நம்மிடம் வெள்ளை நிற பூனைக் குட்டியல்லவா இருந்தது. இந்த குட்டி பழுப்பாக இருக்கிறதே!"

ஏதோ இதனைப் புரிந்து கொண்டது போல் பழுப்புப் பூனைக் குட்டி ஓடி ஒளிந்து கொண்டது. உடனே கறுப்புப் பூனைக் குட்டி (மூன்றாவது) வெளியே வந்தது. அதனைக் கண்ட தந்தை வியப்பால் கத்தினார்; இது என்ன விந்தை! இந்தக் குட்டி கறுப்பாக அல்லவா இருக்கிறது. இங்கு என்ன நடக்கிறது?

உடனே அல்யான் கறுப்புக் குட்டியை தன் அறைக்குள் விட்டு விட்டு வந்தான்.

அப்பா, உனக்கு நிறப் பார்வைக் கோளாறு ஏற்பட்டு விட்டது போலும் என்றான் அல்யான்.

பேசிக் கொண்டிருக்கும் பொழுதே மூன்று குட்டிகளும் வெளியே வந்தன. உடனே தந்தை இருப்பிடத்திலிருந்து குதித்தெழுந்தார்.

இரண்டுக்கு மேல் அல்லவா இருக்கின்றன? வெவ்வேறு நிறமாக இருக்கிறதே! என்று கத்தினார் தந்தை.

வேறு வழியில்லை — என்று எண்ணிய அல்யான் சொன்னான்.

பாவம்; இந்த பூனைக் குட்டிகள் மறைத்து வைக்கப் பட்டிருந்ததால் அவற்றிற்கு பசி எடுக்கத் தொடங்கி விட்டது, பாலாடைக் கட்டியின் வாசனையைக் கண்டதும் அவை வெளியே ஓடி வந்து விட்டன. அம்மா! அவை பெரியதாகும் வரையாவது நம் வீட்டில் இருக்கட்டும் என்று கெஞ்சினான் அல்யான்.

எனக்கு குட்டிகள் இருப்பதில் ஆட்சேபணை இல்லை என்றார் தந்தை

சரி இப்பொழுது முழுக் கதையையும் சொல். உன்னிடம் எத்தனை குட்டிகள் இருக்கின்றன? நூறா? இருநூறா?

இல்லை, இல்லை. மூன்றே மூன்று தான். வேண்டுமானால் இன்னும் கொண்டு வர முடியும், என்றான் அலலான்.

அது தான் கேட்டேன். சரி, மூன்று மட்டும் என்றால் இருந்து விட்டு போகட்டும்.

தாங்கள் அதிகார பூர்வமாகத் தங்க முடிவெடுத்தாகி விட்டது என்பதை புரிந்து கொண்டதைப் போல் பூனைக் குட்டிகள் மேசை, நாற்காலி மீது ஏறிக் குதித்து விளையாடத் தொடங்கி விட்டன.

சில நாட்கள் கழிந்தன.

சலாஸ்கின் வீட்டின் நாய் காணாமல் போய் விட்டது. எனவே சலாஸ்கின்

அல்யான் வீட்டில் பெரியதாக வளர்ந்து விட்ட ஒரு குட்டியை எடுத்துச் சென்றான்.



வலேரிகாவின் தம்பியும் வளர்ந்து விட்டதால் அவனும் மற்றொரு குட்டியை எடுத்துச் சென்றான். அல்யான் முதலில் கண்டெடுத்த குட்டியை தனக்காக வைத்துக் கொண்டான்.

மூன்று குட்டிகளுமே எப்பொழுதுமே அல்யானிடம் மிகப் பிரியமாக இருந்தன.

# பறவையும் சூரியனும்



ஒருநாள் சூரியன் தன் தங்கை நிலாவை பெர்ரி பழம் கொண்டுவர பூமிக்கு அனுப்பினான். பறவை வடிவத்தில் வந்த நிலா,



துந்தராப் பிரதேசத்தில் அலைந்தது. பழங்களைச் சேகரித்தது; திடீரென்று குமாரி பறவையைச் சந்தித்தது. அவை ஒன்றுக்கொன்று வணக்கம் சொல்லிக் கொண்டன.

அறிமுகம் செய்து கொண்டன: இரண்டும் வெகுநேரம் காட்டில் உலாவின: அவற்றின் பைகள் நிரம்பும்வரை பழங்களைச் சேக ரித்தன.

நாம் சற்று களைப்பாறுவோமே! என் றது நிலா.

சரி! நீ வேண்டுமானால் ஓய்வு எடுத் துக் கொள்: அதற்குள் நான் போய் இன்னும் கொஞ்சம் பெர்ரி பழப் சேகரிக் கிறேன் என்றது குமாரி பறவை.



உடனே நிலா மிருதுவான புல்வெளி யில் படுத்து ஆழ்ந்த தூக்கத்தில் மூழ்கியது. பறவை நிலாவின் அருகில் சென்று உற்றுப்

பார்த்தது. நிலாவின் அழகைப் பார்த்து மயங்கிப் போன பறவை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டே இருந்தது.

பிறகு நிலா விழித்தெழுந்தது. நீயும் நன்றாக உறங்கினாயா? என்று பறவையைக் கேட்டது.

நான் இப்பொழுதுதான் உறங்கி விழித்துக் கொண்டேன். உன்னை எழுப்பலாம் என்றிருந்தேன். அதற்குள் நீயே விழித்துக் கொண்டாய்; அது சரி! என் வீடு அருகில் தான் இருக்கிறது; போகலாம் வாயேன், என்றது பறவை.



நிலா பறவையின் வீட்டிற்குச் சென்றது. மாலையில் பறவை சகோதரனான மற்றொரு பறவை அந்த வீட்டுக்கு வந்தது



பறவை சகோதரனிடம் சொல்லியது: இதோ பார்! அந்த நிலா எவ்வளவு அழகாக

இருக்கிறாள். நாளை அவள் பழம் பறிக்கப் போவாள். அப்போது நீ என் உடையைப் போட்டுக் கொண்டு அவளோடு போய் வா! என்றது.



அன்று இரவு மான் மாமிசமும், தேனீரும் அருந்திவிட்டு அவை உறங்கச் சென்றன. மறுநாள் செல்வன் பறவை அதிகாலையில் எழுந்து சகோதரியின் உடைகளைப் போட்டுக்கொண்டு பழம் சேகரிக்க நிலாவோடு சென்றது.

# நரியும் நாரையும்



அப்பொழுது கோடைக் காலம். ஒரு நாரை வயலில் உட்கார்ந்து சந்தோஷத்தால் நடனமாடிக் கொண்டு இருந்தது. பசியோடு இருந்த ஒரு நரி அச்சமயம் அங்கு வந்தது. நாரை சந்தோஷத்துடன் இருப்பதைப் பார்த்து பொறாமைப் பட்ட நரி சொன்னது.

நாரை நடனமாடுகிறது. என் கண்களை நம்ப முடியவில்லை! பாவம்

நாரைக்கு இரண்டே கால்கள் தான் இருக்கின்றன.

நாரை நடனமாடுவதை நிறுத்தி விட்டு நரியைப் பார்த்தது, நரிக்கு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு கால்கள் இருப்பதைக் கண்டு, நாரை தனது அலகைத் திறந்து வியப்படைந்தது.

''ஓ! எவ்வளவு பெரிய அலகு! இருந்து என்ன பயன்? ஒரு பல்லாவது இருக்கிறதா? ஹா... ஹா... ஹா...

நரி தன் பற்கள் அனைத்தும் தெரியும் வண்ணம் உரக்கச் சிரித்தது.

உடனே நாரை தன் அலகை மூடிக் கொண்டு வெட்கத்தால் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டது.

ஹா... ஹா...! உன்னுடைய காதுகள் எங்கே? காதுகள் இல்லாமல் தலை உண்டா? ஏய், நாரையே? உன் மண்டையில் ஏதாவது இருக்கிறதா? இல்லை, அதுவும் காலியா? என்று ஏளனம் செய்தது நரி.

கடலைக் க்டந்து நான் இந்த இடத்திற்கு வந்திருக்கிறேன்; எனவே கொஞ்சம் அறிவு இருக்க வேண்டும் என்று சொல்லிய நாரைக்கு அழுகையே வந்து விட்டது.

அப்பாவி நாரையே! இரண்டே கால்கள், ஒரே ஒரு யோசனையுடைய சிறிய தலை. இவ்வளவுதானே உன்னிடம் இருப்பது! என்னைப் பார்! நான்கு கால்கள், இரண்டு காதுகள், வாய் நிறைய பற்கள் என் தலையிலோ நூற்றுக் கணக்கான யோசனைகள். அழகான, அடர்ந்த வால் இவ்வளவும் என்னிடம் உள்ளன என்றது. நரி.

நாரை மிகவும் வருத்தப் பட்டது. விரக்தியுடன் ஆகாயத்தைப் பார்க்க அலகை மேலே தூக்கியது. அப்பொழுது ஒரு வேடன் வில், அம்புகளுடன் வருவதைப் பார்த்தது.



ஓ! நரியாரே! அன்புள்ள ஸ்ரீமான் நரி அவர்களே! உங்களிடம் நான்கு கால்கள், இரண்டு காதுகள், வாய் நிறைய பற்கள் நூற்றுக் கனக்கான யோசனைகள், ஒரு பெரிய அடர்ந்த வால் இவ்வளவும் இருக்கின்றன. இங்கே பாருங்கள்! ஒரு வேடன் வருகிறான். அவனிடமிருந்து நாம் எப்படி தப்பித்துக் கொள்வது?

எனக்கு எத்தனையோ வழிகள் தெரியும். உணக்கு நீயே யோசனை செய்

என்று சொல்லிவிட்டு நரி ஒரு ஆழமான பொந்திற்குள் சென்று விட்டது.

நரிக்கு நூறு யோசனைகள் தெரியும். எனவே அது செய்வது சிறந்ததுதான் என்று எண்ணிய நாரை, நரியை பின் தொடர்ந்து தானும் பொந்திற்குள் சென்றது.

நரியை நாரை துரத்துவதை இதுவரை கண்டிராத வேடன், பொந்தின் அருகில் சென்று கையை விட்டு நாரையின் இரு கால்ககளப் பிடித்து வெளியே எடுத்தான் நாரையின் இறகுகள் துவண்டு போய் இருந்தன. கண்கள் வெளிறிக் கிடந்தன. இதயத் துடிப்பு அநேகமாக நின்றுவிட்டது.

இந்த வளைக்குள் மூச்சுத் திணறியிருக்கிறது. போலும் என்று எண்ணிய வேடன் நரையை அருகில் இருந்த புல்தரையின் மீது வீசி எறிந்தான். மறுபடி வேடன் வளைக்குள் கையை விட்டு நரியின் வாலை பிடித்து வெளியே இழுத்தான்,

" நரி தன் காதுகளை முறுக்கியது; பற்களை நறநற என்று கடித்தது.; நான்கு கால்களாலும் பிராண்டியது. ஆனாலும் வேடன் நரியை பைக்குள் திணித்துக் கொண்டான்.

சரி, நரையையும் எடுத்துக் கொண்டு போவோம் என்று வேடன் பின் பக்கம் திரும்பினான்.

புல்தரை முழுவதும் தேடிப் பார்த்தான். அங்கு நாரையைக் காணவில்லை மேலேப் பார்த்தான் வேடன். நாரை வெகு தொலைவில், அம்புகளுக்கு எட்டாத தூரத்தில் பறந்து கொண்டு இருந்தது.

தனது அறிவைப் பற்றி தற்பெருமை அடித்துக் கொண்ட நரியின் கதி இப்படி ஆயிற்று! நாரைக்குச் சிறிய தலையானாலும் அதுசாமார்த்தியமாகத் தப்பிவிட்டது!



# வீரமுள்ள சேவல்



வித்ஸமே என்னும் கிராமத்தில் ஒரு ஏழை இருந்தான். அவனுக்குச் சொந்த

மாக எதுவும் கிடையாது. வசிப்பதற்கு இடம் கிடையாது. ஒரு பணக்காரனின் குளியல் அறையை வாடகைக்கு எடுத்திருந்



தான். அதில் தான் அவன் வசித்து வந்தான். பணக்காரன் குளிக்கும் போது

ஏழையை வெளியே துரத்தி விடுவான். பனியானாலும், வெய்யிலானாலும் சரி, பணக்காரன் குளிக்கும் போது ஏழை தெருவில் தான் நிற்க வேண்டி வரும்.



ஏழையிடம் ஒரு சேவல் இருந்தது. அது தான் ஏழைக்கு உற்றார், உறவினர், நண்பர், எல்லாமே. தன் மனதில் இருப்பதை யெல்லாம் சேவலிடம் தான் ஏழை சொல்வான். பணக்காரன் ஏழையிடம் குளியல் அறைக்கு அதிக வாடகையைக் கேட்டான்.

ஏழையிடம் பணம் இல்லை. எனவே வாடகைக்குப் பதில் ஏழையிடம் அதிக வேலை வாங்கினான். இரவும், பகலும், ஓயாது உழைக்கச் செய்தான்.

அப்படி உழைத்தும் பயன் இல்லை. இறுதியில் பணக்காரன், ஏழையை அவனுடைய சேவலோடு குளியல் அறையை விட்டுத் துரத்தி விட்டான். பாவம் அந்த ஏழை!

இருக்க இடமின்றி நடுத் தெருவில் சேவலுடன் பரிதாபமாக நின்று கொண் டிருந்தான். அவனது கண்களில் நீர் வழிந்தது.

பணக்காரனின் இரக்க மற்ற செய லைக் கண்ட சேவலுக்குக் கோபம் வந்து விட்டது.

கவலைப் பட வேண்டாம். இதோ நான் போகிறேன். அந்தப் பணக்காரனிடம் நானே நேரில் போய்ப் பேசுகிறேன் என்று சொல்லி விட்டு சேவல் பணக்காரனின் வீட்டை நோக்கிப் புறப்பட்டது.

போகும் வழியில் சவல் ஒரு கரடியை சந்தித்தது; ஹலோ கரடியாரே! என்றது சேவல்.

ஹலோ. சேவல்! இப்படி எங்கே போய் கொண்டிருக்கிறாய்? என்றது கரடி.



பணக்காரனைப் பார்த்து, என் எஜமானனை மோசமாக நடத்தியதற்காகப் 'பரிசு' கொடுக்கப் போகிறேன் என்றது சேவல்.

சரி, நானும் உன்னுடன் வருகிறேன் என்று சொல்லி கரடியும் சேவலுடன் புறப்

பட்டது. அவை இரண்டும் போய்க் கொண்டிருந்தன. அப்போது வழியிலே ஒரு ஓநாயைக் கண்டன.



ஹலோ, ஓநாயாரே! என்றது சேவல்.

ஹலோ, சேவல்! நீ எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?

பணக்காரனைப் பார்த்து, எனது எஜமானனை மோசமாக நடத்தியதற்காகப் 'பரிசு' கொடுக்கப் போகிறேன் என்றது சேவல்.

ஓ, அப்படியா! நானும் உங்களுடன் வருகிறேன் என்று சொல்லி ஓநாயும் புறப் பட்டது.

சேவல், கரடி, ஓநாய் போய்க்கொண்டிருக்கும் போது இடையிலே. ஒரு வேட்டைப் பருந்தைச் சந்தித்து அதனையும் தங்களுடன் அழைத்துக்கொண்டு போயின.

அவை எல்லாம் பணக்காரன் வீட்டை அடைந்தன. கரடி, ஓநாய், வேட்டைப் பருந்து ஆகியவை புதர்களுக்கிடையே ஒளிந்து கொண்டன. சேவல் மட்டும் பணக்காரனின் வாயிற் கதவின் மேலே உட்கார்ந்து கொண்டு உரக்கப் பாடத் தொடங்கியது.

கொக் - கரக் - கோ...ஏ, பணக்காரா, நான் சொல்வதைக் கேள்!

என் எஜமானனை நீ குளியல் அறையிலிருந்து துரத்தினாய். இப்போது நான் உன்னை இந்த வீட்டை விட்டே துரத்தப் போகிறேன் என்று பாடியது சேவல்.

மாடியில் அமர்ந்திருந்த பணக்காரன், சேவலின் பாட்டைக் கேட்டு சினமுற்று வேலையாட்களை அழைத்து, சேவலைப் பிடித்து வாத்துக் கூண்டினுள் போடச் சொன்னான். அப்போதுதான் வாத்துக்கள்

இதனைக் கடித்துக் கொன்று விடும் என்றாள்.



அவர்களும் அப்படியே செய்தனர். ஆனால் வேட்டைப் பருந்து வாத்துக் கூண்டிற்குள் பறந்து சென்று எல்லா வாத்துக்களையும் கொன்று விட்டது.

மறுநாள் காலையில் சேவல் மறுபடியும் வாயிற்படியில் நின்றுகொண்டு பழைய பாடலைப் பாடிற்று.

அப்போதுதான் மாடிக்கு வந்த பணக்காரன் சேவலின் பாட்டைக்கேட்டு ஆத்திரமடைந்தான். சேவலைப் பிடித்து மாட்டுக்

கொட்டகையில் போடச் சொன்னான் அப்போது பசுவால் மிதிபட்டு சேவ



இறந்து போகும் என நினைத்தான். ஆனால் ஓநாய் இது தான் எனக்கு நல்ல சந்தர்ப்பம் என்று சொல்லி, மாட்டுக் கொட்டகைக்குள் சென்று மாடுகளைக் கொன்று விட்டது.

அடுத்த நாள் காலையிலும் சேவல் பழையபடி கதவின் மேலே உட்கார்ந்து பாடியது.

இம்முறை மிகவும் கோபமடைந்த பணக்காரன் சேவலைப் பிடித்துக்

குதிரைத் தொழுவத்தில் போடச் சொன்னான். ஆனால் இப்போது என் பங்கு என்று சொல்லியபடி கரடி குதிரை தொழுவத்திற்குள் சென்று குதிரைகளைக் கடித்துக் கொன்று விட்டது.

அடுத்த நாளும் சேவல் பழையபடி கதவின் மீதிருந்து பாடியது.



இம்முறை அதிகம் ஆத்திரம் அடைந்த பணக்காரன், சேவலைப் பிடித்துக் கொல்லும்படி ஆணையிட்டான். ஆனால்

சேவலோ, கரடி, ஓநாய், வேட்டைப் பருந்து ஆகியவற்றை உதவிக்கு அழைத்தது. அவை அனைத்தும் ஓடி வந்தன.



கூடத்தில் ஒரே சண்டை. இவைகளைக் கொல்ல வந்த வேலையாட்கள் ஓட ஓட விரட்டப் பட்டார்கள். இங்கும் அங்குமாகச் சிதறடிக்கப் பட்டார்கள். திரும்பிச் செல்ல வழி தெரியாது திணறினார்கள். சேவல் பறந்து சென்று பணக்காரனை இழுத்து வந்தது.

"இங்கே பார்; விரைவாக முடிவெடு! ஒன்று நீ இறங்கத் தயாராக வேண்டும். இல்லையானால் எனது பன்றிகளைப் பார்த்துக் கொள்ள வேண்டும்? என்று அதட்டிக் கேட்டது சேவல்.

ஐயோ, சாவதைவிட பன்றிகளைப் பார்த்துக் கொள்வதே மேல்" என்று அழுதான் பணக்காரன்.

அவ்வளவுதான்; பருந்து தனது கூண்டிற்குப் பறந்தது; ஓநாய் தன் இஷ்டம் போல் ஓடியது. கரடி காட்டிற்கு நடை போட்டது. சேவல் தனது எஜமானனை அழைத்து வந்தது. சேவலும் ஏழையும் அந்த வீட்டில் சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். பணக்காரனோ பன்றிகளையும், நாய்களையும் பார்த்துக் கொண்டிருந்தான்.



# கழுதையின் சிந்தனை



முன்னொரு காலத்தில் காட்டு ராஜா வான சிங்கம், தன் ராஜ்யத்தைச் சுற்றி வந்தது. அப்பொழுது ஒரு நீரோடையில் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடிக் கொண் டிருந்தது. அந்த ஓடையைத் தாண்ட சிங்கம் விரும்பியது; ஆனால் ஓடை மிக அகலமாக இருந்தது. சிங்கத்திற்குக் கோபம் தாங்க முடியவில்லை. அது கர்ஜனை செய்தது, அதைக் கேட்டு கரடி, கழுதை, எருமை, நரி, முயல், ஆடு, மான் முதலிய மிருகங்கள் எல்லாம் ஓடி வந்தன.

இங்கு ஒரு பாலம் கட்டுங்கள் என்று சிங்கம் உத்தர விட்டது.



உடனே வேலையைத் தொடங்குங்கள். நரி தான் மேஸ்திரி. கரடி, கழுதை முதலிய நீங்கள் எல்லோரும் செங்கல்களையும், இரும்புத் தூண்களையும், பலகைகளையும் இழுத்து வர வேண்டும்.........

இவ்வாறு சிங்கம் உத்தர விட்ட போதி லும், கழுதை அசையாமல் நின்று கொண் டிருந்தது. அது சிந்தனையில் மூழ்கி இருந்தது.

ஏன் சும்மா நின்று கொண்டிருக்கிறாய் என்று சிங்கம் சீறியது.

மகாராஜா! நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்.

என்ன சிந்தனை?

இந்த ஓடைக்குக் குறுக்கே நாம் ஏன் பாலம் கட்ட வேண்டும்? அதை ஒரு பக்கத்தில் கட்டினால், வேலை மிக சுலபமாக முடியும் அல்லவா!



# அணிலின் கோபம்

ஒரு நாள் ஒரு குட்டி அணில் புல் சாப்பிட வெளியே சென்றது. பரந்த புல்வெளியில், பசும் புற்களை அது கடித்துச் சாப்பிடத் தொடங்கியது. அப்பொழுது



அணிலின் மூக்கை ஒரு புல் வெட்டி விட்டது. மூக்கில் காயம் ஏற்படவே, அணிலுக்கு கோபம்வந்தது. இந்தப்புல்வெளியில் உள்ள புற்கள் அனைத்தும் எரிந்து சாம்பலாகப் போகட்டும் என்று அணில் ஆத்திரத்துடன் கத்தியது. இவ்வாறு சபித்து விட்டு அணில் வீட்டுக்கு ஓடிப் போய் விட்டது.

அடுத்த நாள் அது புல்வெளிக்கு ஓடி வந்தது. அப்பொழுது புல்வெளியில் தீப் பிடித்து எரிந்து கொண்டிருந்தது. அணில் பயந்து விட்டது; உதவிக்கு இதர அணில் களைக் கூப்பிட்டது. ஐயோ சீக்கிரமாக ஏரிக்குச் சென்று உங்கள் வாயில் தண்ணீர் கொண்டு வாருங்கள்; ஊம். சீக்கிரம் போங்கள் என்று கூட்டி அணில் கத்தியது.

எல்லா அணில்களும் தண்ணீரைக் கொண்டு வந்து. புல்வெளியில் ஊற்றின. ஆனால் ஒரு புல் கூட மிஞ்சவில்லை; எல்லாம் தீயில் எரிந்து சாம்பலாகி விட்டன. அணில்களுக்குப் பசி தாங்க முடிய வில்லை, சாப்பிட கொஞ்சம் கூட புல் கிடையாது.

அடுத்த ஆண்டு வந்தது. அந்த புல் வெளியில் பசுமையான புல் முளைத்தது, மிகவும் செழிப்பான புற்களைக் கண்ட அணில் சந்தோசத்தால் துள்ளிக் குதித்தது. வேண்டிய மட்டும் புற்களைச் சாப் பிட்டது, அதற்குக் கோபம் வரவே யில்லை. தன் மூக்கிற்கு என்ன நேர்ந்தா லும் அது கவலைப் படவில்லை.



## ஈயின் விபரீத ஆசை

ஈ ஒன்று மனிதனிடம் சென்று அவனைப் புகழ்ந்துப் பேசி, தனக்கு ஒரு



வால்வேண்டும் என்று கேட்டது, வாலுள்ள மிருகங்கள் எல்லாம் எவ்வளவு அழகாக இருக்கின்றன; எனவே, எனக்கும் ஒரு வால் வேண்டும்'' என்று அது சொல்லியது.

மனிதன் என்ன சொல்லியும், ஈ கேட்க வில்லை; பிடிவாதமாக வால் வேண்டும் என்று நச்சரித்தது.

சரி, காடு, நதி, வயல் முதலிய எல்லா இடத்திற்கும் பறந்து செல், அங்குள்ள பறவைகள், மிருகங்கள், ஊர்வன ஆகியவற்றில் ஏதாவது ஒன்று அழகுக்காக மட்டும், வால் வைத்திருக்கிறது என்றால்,



என்னிடம் வந்து சொல் உனக்கு கண்டிப்பாக நான் வால் தருகிறேன், என்றான் மனிதன்.

முதலில் ஈ நதியை நோக்கிச் சென்றது. அதில் வாலுடன் நீந்திக் கொண்டிருந்த

மீனைப் பார்த்து, மீனே, எனக்கு உன் வாலைத் தாயேன். அழகுக்காகத் தானே வைத்திருக்கிறாய் என்றது ஈ.

"இல்லவே இல்லை. நான் பக்க வாட்டில் திரும்ப வேண்டும் என்றால் வாலின் உதவியால் தான் முடிகிறது. வால் எனக்கு மிகவும் தேவையான ஒன்று. உனக்கு கொடுக்க இயலாது" என்று பதிலளித்தது மீன்.

அடுத்து ஈ காட்டை நோக்கிப் பறந்தது, அங்கு ஒரு மரத்தில் உட்கார்ந்திருந்த மரங்கொத்திப் பறவையைப் பார்த்து, "உன்னுடைய வால் அழகுக்காகத் தானே இருக்கிறது. அதை எனக்கு கொடுக்க மாட்டாயா?" என்று கேட்டது.

"நீ என்ன சொல்கிறாய்? முட்டாள் தனமாக இருக்கிறதே. நான் மரத்தைக் கொத்துவதைப் பார்" என்று கூறி, மரங்கொத்தி தன்னுடைய வாலை மரப் பட்டையின் மீது முட்டுக் கொடுத்தது. பிறகு தன் உடல் முழுவதையும் வளைத்து, கிளையின் மீது மிகப் பலமாகத் தனது

அலகினால் கொத்தியது. அப்பொழுது மரப் பட்டையிலிருந்து துகள்கள் தெறித்தன.



இதனைக் கண்ட ஈ, வால் இல்லாமல் மரங்கொத்தி வாழ முடியாது என்று எண்ணியது. தன் பயணத்தை மேலும் தொடர்ந்தது.

காட்டில் ஒரு புதருக்கு இடையில் பெண் மான் அழகான, மிருதுவான, வெண்மையான சிறிய வாலுடன் நின்று கொண்டிருப்பதை ஈ கண்டது.

நீ எப்படி என் வாலைக் கேட்கிறாய்? நான் என் வாலைக் கொடுத்து விட்டால் என் குட்டி இறந்து விடும் என்றது அச்சத்துடன் மான்.

உன வாலுக்கும், உன் குட்டிக்கும் என்ன தொடர்பு என்று கேட்டது.

சரி, ஒரு ஓநாய் எங்களை விரட்டிக் கொண்டு வருவதாக வைத்துக் கொள் வோம். நான் உடனே ஓடிப்போய் அடர்ந்த மரங்களுக்கு இடையே என்னை மறைத்துக் கொள்வேன். மரங்களின் இடையே என்னை யாரும் கண்டு பிடிக்க முடியாது.

எனவே நான் என் சிறிய வாலை மட்டும் கைக் குட்டையை போல் ஆட்டி அசைத்து "இந்தப் பக்கம்" என்று சமிக்ஞை செய்வேன். என் குட்டி அதை பார்த்துப் புரிந்து கொண்டு என்னைத் தொடரும். இப்படித் தான் நாங்கள் ஓநா யிடமிருந்து தப்பித்துக் கொள்கிறோம் என்றது மான்.

அங்கிருந்து பறந்து போன ஈ, வழி யிலே ஒரு நரியைப் பார்த்தது; அதன் அழகான வாலைப் பார்த்து எனக்குத் தர மாட்டாயா? என்று கேட்டது.

ஓ! முடியாது. என்னால் கொடுக்க முடியாது: வால் இல்லாவிட்டால் வேட்டை நாய்களிடமிருந்து எங்களால் தப்பிக்க முடியாது. அவை எங்களை எளிதில் பிடித்து விடும் என்றது நரி.

அது எப்படி? என்று கேட்டது ஈ.

நாய், என்னைப் பிடிக்க வந்தால் என் வாலை ஒரு புறமும், உடலை ஒரு புறமும் திருப்புகிறேன். நாய் என் வாலைப் பார்த்து பின் தொடரும் பொழுது, நான் வேறு திசையில் ஓடி விடுகிறேன் என்று நரி சொன்னது

எல்லா மிருகங்களுக்கும் வால் அவ சியம் என்பதை ஈ உணர்ந்தது. இருப் பினும் வீட்டிற்கு வந்து மறுபடியும் அதைப் பற்றிச் சிந்தித்தது.

நான் மனிதனிடம் சென்று தொந்தரவு செய்து எப்படியாவது வாலை வாங்கி வருவேன் என்று கூறிக் கொண்டது.

அந்த மனிதன் வீட்டில் ஜன்னலுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு வெளியே பார்த்துக் கொண்டிருந்தான்.

ஈ, ஜன்னல் வழியாக அங்கு சென்று நேராக அவனது மூக்கின் மேல் உட்கார்ந்தது. மனிதன் மூக்கின் மீது ஒரு தட்டுத் தட்டியதும், ஈ அவனுடைய புருவத்துக்குத் தாவியது. புருவத்தில் தட்டியதும் மூக்குக்கு வந்தது.

உனக்குப் புண்ணியம் உண்டு. என்னைத் தனியாக இருக்க விடேன். தொந்தர்வு செய்யாமல் இருக்க மாட்டாயா? என்றான் மனிதன்.

நான் சும்மா இருக்க மாட்டேன். நீ தான் என்னை தேவைப் பொருளாக்கினாய். நீ ஏன் என்னை வாலைத் தேடி வரும்படி அனுப்பினாய்? நான் எல்லா மிருகங்களை

யும் கேட்டேன். அவை அனைத்துக்கும் வால் அவசியமாம் என்று ஈ கூறியது.

ஈயிடமிருந்து எளிதில் தப்ப முடியாது என்று எண்ணிய மனிதன், சற்று யோசித்து விட்டுக் கூறினான்.

அதோ பார், அங்கே ஒரு பசு இருக்கிறது. அதனிடம் சென்று எதற்காக வாலை வைத்திருக்கிறது என்று கேட்டு வா என்றான்.

சரி நான் போய் கேட்பேன். பசு தன் வாலைக் கொடுக்கா விட்டால், உன்னை நிம்மதியாக இருக்க விட மாட்டேன் என்றது ஈ.

உடனே ஈ ஜன்னலின் வழியாக வெளியே சென்று, பசுவின் மீது உட்கார்ந்தது.



பசுவே, பசுவே உனக்கு வால் எதற்கு?

பசு பதில் ஒன்றும் கூறவில்லை. மாறாக தன்னுடைய வாலாய் ஈயின் மீது ஒரு அடி அடித்தது.

அவ்வளவு தான். ஈ பொத்தென்று தரையில் விழுந்தது. வலி தாங்க முடியாமல் துடித்தது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த மனிதன்.

ஆம். இப்பொழுது உனக்குத் தேவையானது கிடைத்து விட்டது. இனிமேலாவது மனிதர்களையும், மிருகங்களையும் தொந்தரவு செய்வதை நிறுத்து என்றான்.



# குருவியும் குள்ளநரியும்



மரத்தின் மீது ஒரு குருவி உட்கார்ந்திருந்தது. அப்பக்கமாக ஒரு குள்ள நரி வந்தது.

வணக்கம், நண்பனே. உன் குரலைக் கேட்டதும். உன்னைக் காண ஓடிடோடி வந்தேன் என்றது குள்ள நரி.

"இன் அன்பான வார்த்தைகளுக்கு மிக்க நன்றி," என்றது குருவி.

ஆனால் அதைக் கேட்காதது போல் பாவனை செய்தது குள்ளநரி.

நீ என்ன கூறுகிறாய்? எனக்குக் கேட்கவே இல்லை. இங்கே வா. கீழே இறங்கி வா. உன்னோடு பேச எனக்குக் ஆசை. நீயோ மரத்திலிருந்து பேசுகின்றாய் நீ பேசுவது என் காதில் விழவே இல்லை என்றது குள்ளநரி.

ஐயே, தரைக்கு வர எனக்குப் பயமாக இருக்கிறது. என்னைப் போன்ற பறவைகள் தரைக்கு வருவது ஆபத்தானது என்றது குருவி.

எனக்கா நீ பயப்படுகிறாய்? என்று வியப்புடன் கேட்டது குள்ளநரி.

உன்னிடம் பயம் ல்லை, ஆனால் இதர மிருகங்கள் உள்ளனவே என்றது குருவி.

நண்பனே, பயப்படாதே. சமீபத்தில் தான் உலகில் சமாதானம் நிலவ வேண்டும் என்று சட்டம் அறிவிக்கப் பட்டுள்ளது. எனவே இனிமேல் மிருகங்கள் ஒன்றை ஒன்று தாக்கிக் கொள்ளாது. ஆகவே நீ பயப்படத் தேவையில்லை.

அப்படியா! அது நல்லது தான். அதோ பார், நாய்கள் இப்பக்கமாக ஓடி வருகின்றன. அவற்றைப் பார்த்து நீ ஓட வேண்டிய அவசியமில்லை. நீ இங்கே இருக்கலாம் என்றது குருவி.

''நாய்கள்'' என்ற வார்த்தையைக் கேட்டவுடனே குள்ளநரி ஓட்டம் பிடிக்கத் தொடங்கியது.

நீ எங்கே ஓடுகிறாய்? உலகில் அமைதி நிலவ வேண்டும் என்ற சட்டம் அறிவிக்கப், பட்டுள்ளதே. பின் ஏன் ஓடுகிறாய்? நாய்கள் உன்னைத் தொடாது என்றது குருவி.

யாருக்குத் தெரியும்? அந்த அறிவிப்பை நாய்கள் இன்னும் அறிந்திருக்காமல் இருக்கலாம் என்று கத்திக் கொண்டே ஓட்டம் பிடித்தது குள்ளநரி.

# புலியின் சிந்தனை

ஓர் புலி பசியுடன் சென்று கொண் டிருந்தது. திடீர் என்று ஒரு குள்ள நரி யைப் பார்த்தது; அதனைப் பிடித்துச் சாப்பிட நினைத்தது.



புலியே, உன் பற்களைக் காட் டாதே. உனக்கு ஏதாவது தொல்லை நேருவதற்கு முன்பே நீ இவ்விடத்தை விட்டு ஓடி விடு. உனக்கு நான் யார் என்று என்று தெரியுமா? நான்தான் காட்டு விலங்குகளுக் கெல்லாம் அரசி என்றது நரி.

முட்டாள் தனமாகப் பேசாதே. நான் தான் காட்டு விலங்குகளின் அரசன் என்பதை அனைவரும் அறிவர் என்று முழங்கியது புலி.

நீ என்னை நம்பாவிட்டால் என்னோடு வா. விரைவில் யார் எவர் என்பதை நீ உணர்ந்து கொள்வாய் என்றது நரி.

இரண்டும் காட்டு வழியாக நடந்து சென்றன. அவற்றைக் கண்டு அஞ்சி இதர விலங்குகள் அனைத்தும் இங்கும் அங்குமாக ஓடி மறைந்து கொண்டன.

நரி சொல்வது ஒருகால் உண்மையாக இருக்கலாம் என்று எண்ணிய புலி, புதருக்குள் ஓடி மறைந்து விட்டது.

